## சுரங்கம்

# எதிர்காலத்தில் எம்.எல்.ஏ.

*20 ஆண்டுகளுக்கு முன்பு 1997 ஜனவரி 'ஓம் சக்தி' இதழில் தலையங்கமாக அருட்செல்வர் எழுதிய இந்தக் கட்டுரை, ஒரு புதிய கருத்தோட்டத்தை முன்வைக்கிறது.*

*இப்போதுள்ள தமிழகத்தில் உள்ளாட்சிகளுக்கு உரிய பிரதிநிதிகள் இல்லாமல் போனதால், சிறப்பு அதிகாரிகளின் மேற்பார்வையில்தான் மாநகராட்சி, நகராட்சி, பஞ்சாயத்து, பஞ்சாயத்து ஒன்றியம் ஆகிய அனைத்தும் நிர்வகிக்கப்பட்டு வருகின்றன.*

*இந்தப் பின்னணியில் இந்தக் கட்டுரை உள்ளாட்சிகளான நகரசபை, பஞ்சாயத்துகளுக்கு உரிய நிதி – நிர்வாக அதிகாரங்கள் தரப்பட்டு விடுமானால், மக்களுக்கான நலத்திட்டங்கள் அனைத்தையும் நிறைவேற்றிக்கொள்ள முடியும்.*

*அந்நிலையில், எம்.எல்.ஏ.–க்களுக்கு என்ன பாத்திரம் இருக்க முடியும் என்று அருட்செல்வர் எழுப்பிய கேள்வி, இப்போதும் பதில் தேடுவதற்கானதாகவே உள்ளது. இதனை இந்த மாதம் 'சுரங்கம்' பகுதியில் 'ஓம் சக்தி' வாசகர்களுக்கு வழங்குகிறோம்.*

*– இ.ஆர்.*

உத்தமர் காந்தி அடிகள் இந்தியா கிராமங்களில்தான் வசிக்கிறது (India lives in villages) என்று கண்டறிந்து அறிவித்தவர்.

கிராம சுயராஜ்யத்தை காந்திஜி தனது கற்பனைக்கு உட்பட்ட ராமராஜ்யமாகவே கருதினார். நகரங்களின் வளர்ச்சியை அவர் எப்போதும் எதிர்த்தவர்.

கிராமங்கள் ஒவ்வொன்றையும் சுய தேவை பூர்த்தி உள்ளதாக ஆக்குவதுதான் தேசபக்தி என்றார்.

நமது பாரம்பரியம் கிராமப் பாரம்பரியம். ஐரோப்பிய நாகரிகம் இதற்கு எதிரானது. அது எந்திரமயமானது. ஆனால், காந்தியடிகள் சொன்னதற்கு மாறாகவே நாடு வெகுகாலம் சென்று கொண்டிருந்தது.

பிரிட்டிஷார் நம் நாட்டைக் கைப்பற்றுவதற்கு முன்பே நமது நாட்டில் பாரம்பரியமாகக் கிராமப் பஞ்சாயத்துக்கள் செயல்படத்தான் செய்தன.

தமிழ்நாட்டில் அந்நிய ஆங்கில ஆட்சியில் ஜில்லா போர்டுகள், நகரசபைகள், பஞ்சாயத்து போர்டுகள், தாலுக்கா போர்டுகள் நல்ல முறையில் நடைபெற்று வந்தன.

காங்கிரஸ் ஆட்சியில் தமிழ்நாடு முதலிய மாநிலங்களில் இந்த போர்டுகள் கலைக்கப்பட்டு, பஞ்சாயத்து யூனியன்கள் தொடங்கப்பட்டன. ஆனால், மகாராஜாக்களின் சமஸ்தானங்களாக இருந்த ஜில்லா போர்டுகள் போன்ற உள்ளாட்சி அமைப்புகள் இல்லை. அங்கெல்லாம் முதன் முதலாகத் தொடங்கப்பட்டதே பஞ்சாயத்து யூனியன்கள்தான். அதிகாரப் பரவல் முறையில் இது சிறு வளர்ச்சியாக இருந்தது என்று மத்தியத் திட்டக்குழு உறுப்



**டாக்டர் நா. மகாலிங்கம்**




பினர் திரு. வி.டி. கிருஷ்ணமாச்சாரி குறிப்பிட்டுள்ளார்.

ஆனால், மாநில அரசிடமும், மத்திய அரசிடமும் அதிகாரங்கள் குவிந்து விட்டன. மக்களுக்கு வரவேண்டிய அதிகாரங்கள், அமைச்சர்கள், அரசு செக்ரட்டரிகள், டைரக்டர்கள், கலெக்டர்கள், கமிஷனர்கள் ஆகியோரிடமே குவிந்தன.

அமரர் ராஜீவ்காந்தி பிரதமராக இருந்தபோது கொண்டுவரப்பட்ட நகர்பாலிகா, பஞ்சாயத்துராஜ் அரசியல் சட்டத்தில் 72, 73–ஆவது திருத்தங்களாக நிறைவேற்றப்பட்டன.

அரசியல் அமைப்புச் சட்டத்தில் இடம் பெற்றுள்ள ராணுவம், வெளிநாட்டு உறவு முதலிய 97 துறைகள் தொடர்பாக மத்திய அரசு மட்டுமே சட்டம் இயற்ற முடியும். இதேபோல் நீர்ப்பாசனம், நிலம் முதலிய 67 துறைகளில் மாநில அரசு மட்டுமே சட்டம் இயற்ற முடியும்.

இவை அல்லாமல் வனத்துறை, கல்வித்துறை முதலிய 48 துறைகள் உள்ளன. இவை பொதுப் பட்டியலில் உள்ளன. இவற்றில் மாநில அரசும், மத்திய அரசும் சட்டம் இயற்றலாம்.

இதில்தான் பஞ்சாயத்தும் இடம் பெற்றுள்ளது. பொதுப் பட்டியலில் உள்ள துறைகளில் மத்திய, மாநில அரசுகள் கருத்து வேறுபாடுள்ள சட்டங்களை இயற்றினால், அந்த இரண்டில் மத்திய அரசின் சட்டம்தான் செல்லுபடியாகும்.

இதேபோல, ஓர் அதிகாரம் பஞ்சாயத்துக்களுக்கும் வழங்கப்பட்டிருக்கிறது. அதன்படி பஞ்சாயத்தில் அமைக்கப்பட்டுள்ள “கிராம சபை” மாநில அரசின் சட்டசபை போல – மத்திய அரசின் லோக் சபை போல முக்கியத்துவம் வாய்ந்தது.

அரசியல் அமைப்புத் திருத்தச் சட்டப்படி 24.4.1994 முதல், தமிழ்நாடு ஊராட்சிகள் புதிய சட்டம் அமலுக்கு வந்துள்ளது. இப்புதிய சட்டம், ஊராட்சிகளுக்கான தேர்தலை நடத்தத் தேர்தல் ஆணையம் ஒன்றையும், ஊராட்சிகளுக்கு நிதி வசதி செய்ய நிதி ஆணையம் ஒன்றையும் அமைக்க வழி வகுக்கிறது. இத்துடன் ஒரு திட்டக்குழுவையும் அமைத்துக்கொள்ள அச்சட்டம் அனுமதிக்கிறது.

பஞ்சாயத்துராஜ் சட்டம் கிராம நிர்வாகத்தில் அனைத்துப் பிரிவு மக்களும் பங்கேற்பதற்கான வாய்ப்பை வழங்கி உள்ளது. இதன்மூலம் கிராமங்களில் காந்தியடிகள் கனவு கண்ட பரவல் முறை – அதிகாரக் கோட்பாடு, நடைமுறையாவதற்கான சாத்தியம் அதிகரித்துள்ளது.

அண்மையில் நடந்த உள்ளாட்சித் தேர்தல்கள் மூலம் ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் மக்கள் பிரதிநிதிகள் உள்ளாட்சி நிர்வாகத்திற்குத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள். இவர்களில் 13,741 பேர் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உள்ளாட்சி நிர்வாகத் தலைவர்கள். மக்கள் ஜனநாயகம் விரிந்து பரந்து பட்டதாக இருப்பதற்கு இது எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

சென்ற பல ஆண்டுகளாக இந்தச் சுயாட்சி அமைப்புகள் அனைத்தும் முடக்கப்பட்டு அரசாங்கத்தின் சிறப்பு அதிகாரிகளால் நிர்வகிக்கப்பட்டு அவை அனைத்தும் அரசாங்கத்தின் இலாகாக்கள் போல ஆக்கப்பட்டு விட்டன.

அதன் காரணமாக, ஊழல் பெருகி மக்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்து கொள்ள முடியாத சூழ்நிலையே நீடித்து வந்தது. இந்த அமைப்புகளுக்கு மக்கள் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டுச் செயல் பட்டிருப்பார்களேயானால், கலர் தொலைக்காட்சிப் பெட்டிகளை வாங்குவதாய் இருந்தாலும், மயானங்களுக்குக் கூரை அமைப்பதாய் இருந்தாலும், கிராம சபையில் முறையாக விவாதித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றி ஊழல் இடம்பெறாமல் செயல்படுத்தி இருக்க முடியும்.

ஆகவேதான், சுயாட்சி நிர்வாகங்களில் மக்கள் பங்கு பெறவேண்டும் என்று உத்தமர் காந்தி

அடிகள் வலியுறுத்தி வந்தார். அதன்மூலம், அதிகாரங்கள் குவிக்கப்படாமல் கீழ்மட்டம் வரை பரவலாக்கப்படும்.

இந்த உள்ளாட்சித் தேர்தல்களை நடத்த ரூ. 50 கோடி செலவு ஏற்பட்டது. அதன் பலனோ, பல்லாயிரம் கோடிகளுக்குச் சமமானது. இதன் மூலம் அதிகாரப் பரவல் ஏற்படுமானால், அதனால் அரசியல் சட்டச் சிக்கல் ஒன்று இனிமேல் ஏற்படு வதற்கான வாய்ப்பு உள்ளது. அதனைத் தவிர்க்க முடியாது.

இதுவரை எம்.எல்.ஏ.வாகவோ, எம்.பி. யாகவோ தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு பிரதிநிதி, அவர் தொகுதிகளில் உள்ள மக்கள் கோரிக்கை களைச் சட்டசபையில் அல்லது லோக் சபையில் எடுத்துச் சொல்லி, உரிய அமைச்சரை அணுகிச் சம்பந்தப்பட்ட தன் தொகுதியில் கல்லூரி, பள்ளிக் கூடம், சாலை வசதி, மருத்துவமனை இவற்றைச் செய்வதற்கு வாய்ப்பு இருந்து வந்தது.

ஆனால், தற்போது அமல்படுத்தப்பட்ட பஞ் சாயத்து ராஜ் – நகர்பாலிகா சட்டங்களின் மூலம் ஒரு சிறு கிராமமாக இருந்தால்கூட, அங்கே உள்ள கிராம சபை அக்கிராம மக்களின் பிரச் சனைகளை விவாதித்து, அதற்குத் தீர்வு காண் பதற்கு அதிகாரம் உள்ளதாக ஆக்கப்பட்டுள்ளது. நிர்வாக அதிகாரம் மட்டுமல்லாமல், நிதி அதிகாரம் பற்றியும் இப்போது சிந்திக்கப்படுகிறது.

வீதி விளக்குகள், சாலை அமைத்தல், குடிநீர் விநியோகம், பாதாளச் சாக்கடை வசதி, கழிவுநீர் அப்புறப்படுத்துதல், ஆரம்பப் பாடசாலை, ஆரம்ப சுகாதார மருத்துவமனை, சமூகக் கூடங்கள், பூங்காக்கள் ஆகியவற்றைக் கவனத்தில் கொண்டு நடவடிக்கை எடுக்க, அதற்கான நிர்வாக அதிகாரங்களை இந்தச் சுய ஆட்சி அமைப்புகள் பெற்றுள்ளன.

பஞ்சாயத்து ஊராட்சிகள் வசம் ஆரம்பக் கல்வி, வீட்டு வசதி, வேலை வாய்ப்பு முதலிய துறைகள் ஒதுக்கப்பட வேண்டும். அவற்றிற்கு நிர்வாக அதிகாரங்கள் தரப்படுவதைப் போல நிதி வசதிகளைப் பெருக்கிக் கொள்ளும் வாய்ப்பு களையும் தரவேண்டும். நுகர்பொருள்கள்மீது வரி விதித்துக் கொள்ளும் அதிகாரத்தைக்கூட வழங்கலாம்.

தமிழ்நாட்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட நகராட்சி, பஞ்சாயத்து ஊராட்சிப் பிரதிநிதிகள் கூட்டத்தை, தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் அவர்கள், ரூ. 50 லட்சம் முதலீடு வரை தீட்டப்படும் குடிநீர்த் திட்டங்களை உள்ளாட்சி அமைப்புகளே நிறை வேற்றிக்கொள்ள உரிய நடவடிக்கை எடுக்கப் பட்டு வருவதாக அறிவித்தார்.

இதேபோல மாநகராட்சிகளின் அபிவிருத்திக் காகவே ஒரு சிறப்பு அபிவிருத்தி நிதியத்தை அமைப்பதற்கான யோசனை அரசிடம் இருப்பதா கவும் தெரிவித்தார்.

உள்ளாட்சிப் பிரதிநிதிகளுக்குத் தேவையான நிர்வாக அதிகாரங்களையும் உள்ளாட்சிகளுக்குத் தேவையான நிதி வசதிகளைப் பெருக்குவதற் கான அதிகாரங்களையும் பற்றி மாநிலத் திட்டக் குழுவில் விரிவாக விவாதிக்கப்படும் என்றும் அறிவித்துள்ளார்.

இவை எல்லாம் உள்ளாட்சி அமைப்புகள் மேலும் உறுதி பெறுவதற்கான வாய்ப்புகள் பிரகாச மாக இருக்கின்றன என்பதைத் தெரிவிக்கின்றன. ஏனெனில், இந்த அமைப்புகளுக்கான தேர்தல் களை, இனி ஆட்சியில் உள்ள அரசியல் கட்சிகள் அரசியல் அமைப்பு 73–ஆவது திருத்தச் சட்டத்




தின்படி 5 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடத்தியே தீரவேண்டும்.

அமெரிக்காவில் நவம்பர் மாதம் முதல் வாரத் தில் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் தேர்தல் 4 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடப்பதை யாரும் ஒத்தி வைக்க முடியாது.

அதுபோலச் சட்டத்தை நாம் இயற்றி இருக் கிறோம். தொகுதி மக்களின் பிரச்சனைகளைப் பிரதிநிதித்துவப் படுத்தத் தேவையில்லாத அள வுக்கு எம்.எல்.ஏ.–க்களுக்கும், எம்.பி.–க்களுக்கும் சூழ்நிலைகள் ஏற்பட்டு விடுமானால், அநேகமாக எம்.எல்.ஏ., எம்.பி. பதவிகளுக்கு இப்போதுபோலத் தேர்தலில் நிற்கப் போட்டி போட்டுக்கொண்டு முன்வர மாட்டார்கள்.

அதற்குப் பதிலாக, உள்ளாட்சி அமைப்பு களின் தலைவர்களுக்குத்தான் போட்டா போட்டி அதிகமாக இருக்கும். அப்படி என்றால், மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிற இந்த எம்.எல்.ஏ. சட்டசபை யில் புதிய சட்டங்களை இயற்றுகிற விவாதங்களில் கலந்து கொண்டு தங்களுடைய புலமைகளையும் அனுபவங்களையும் வெளிப் படுத்தியாக வேண்டும்.

மருத்துவம், பொறியியல், தொழில்நுட்பம், விவசாயம், நீரியல், கல்வி, ஏற்றுமதி – இறக்குமதி ஆகிய துறைகளில் புலமை மிக்கவர்களாக இருந்தால்தான் சட்டசபை விவாதத்தில் கலந்து கொண்டு சிறந்த சட்டங்களை உருவாக்கும் வகையில் கருத்துக்களை வழங்க முடியும்.

ஆகவே, எதிர்காலத்தில் சட்டசபையிலும், லோக்சபையிலும் திறமையாக வாதிடக்கூடிய கற்றவர்கள் மட்டுமே இடம் பெறும்படியாக ஆகிவிடும்.

தற்போது உள்ளது போல, வெறும் மக்கள் செல்வாக்கோ, விளம்பரமோ உள்ளவர்களுக்கான தேவை குறைந்து போய்விடும்.

எதிர்காலத்தில் சட்டசபையில் பேசும் எந்த எம்.எல்.ஏ.–வும் கல்லூரிகளைக் கட்டித் தர வேண்டும் என்றோ, சாலைகளைப் போட்டுத் தர வேண்டும் எனறோ அரசிடம் கேட்க வேண்டிய அவசியம் இருக்காது. ஏனெனில், அவை அனைத்தும் உள்ளாட்சிகளுக்கான, நகராட்சிகளுக்கான பிரச்சனைகளாக விவாதிக்கப்பட்டுத் தீர்வு காணப்படும்.



உள்ளாட்சிப் பிரதிநிதிகளுக்கும் அமைச்சரவைக்கும் நேரடியான தொடர்பு ஏற்பட்டு விடும். இதற்கான அடையாளங்கள் ஆரம்பமாகி விட்டன.

நகராட்சிகளுக்கும் பஞ்சாயத்து மற்றும் ஒன்றிய, ஊராட்சிகளுக்கும் பதவிக்காலம் 3 ஆண்டுகளாகவும், எம்.எல்.ஏ. மற்றும் எம்.பி.–க்களின் பதவிக்காலம் 6 ஆண்டுகளாகவும் செய்வது நல்லது. இப்போது எல்லாமே 5 ஆண்களாகச் செய்து விட்டோம்.

எம்.எல்.ஏ.–க்கள் மற்றும் எம்.பி.–க்கள் ஈடுபட்டுத் தீர்வு காணக்கூடிய பிரச்சனைகள் மாநில – மத்தியத் திட்டக்குழு சம்பந்தப்பட்டவையாகவும் மாநிலத்திற்கு மாநிலம் உள்ள நதிநீர் ஒப்பந்தம், அனல்மின் உற்பத்தி முதலிய கனரகத் தொழில் சம்பந்தப்பட்டவையாகவும் இருக்கும்.

ஆனால், உள்ளாட்சிப் பிரச்சனைகளான தெருவிளக்கு, குடிநீர் விநியோகம் முதலியவற்றிற்கு 3 ஆண்டுப் பதவிக்காலம் போதும். சுய ஆட்சி நிர்வாகத்தில் அதிகமானவர்கள் பங்குபெற வேண்டுமானால், பதவிக்காலத்தை 3 ஆண்டுகள் என நிர்ணயிப்பதே நல்லது. திருமதி. இந்திரா காந்தி பிரதமராக இருந்தபோது இவ்வாறு ஒரு நல்ல திட்டத்தைக் கட்சிக் கூட்டத்தில் அறிவித்தார். நடைமுறைப் படுத்துவதற்கு முன்பே மத வெறிக்குப் பலியாகி விட்டார்.

தமிழக முதல்வர் சென்ற மாதம் கூட்டிய உள்ளாட்சி அமைப்புகளின் தலைவர்களின் கூட்டத்தில் நகராட்சிகளின் குழுத் தலைவர் திரு. சுப்பராஜன் பேசுகையில், உள்ளாட்சி அமைப்புகளுக்கு வருமானவரி, விற்பனைவரி உள்ளிட்ட அனைத்திலும் மாநில அரசு பங்கு தர வேண்டும் என்று குறிப்பிடுமளவுக்குச் சென்றுள்ளார்.

இதனை இன்றைய சூழ்நிலையில் அரசும் அதிகாரிகளும் அமைச்சரவையும் எந்தக் கண்ணோட்டத்தில் பரிசீலிக்கப்போகிறது என்பது தெரியவில்லை. காலம்தான் அதற்குப் பதில் சொல்லும்.

உள்ளாட்சி நிர்வாகத்தைத் திறம்படச் செயல்படுத்தக்கூடிய சூழ்நிலை உருவாகிவிட்டால், தொகுதிப் பிரச்சனைகள் அனைத்தும் அநேகமாகத் தீர்க்கப்பட்டு விடும். மாநில அரசுக்கு வேலை மிகக்குறைந்து போகும். ஆகவே, மாநில அரசு மந்திரிகளின் எண்ணிக்கையைத் தற்போதுள்ளது போலப் பெருக்காமல் அதிகபட்சம் 12 மந்திரிகளை மட்டுமே வைத்துக்கொண்டு சமாளிக்க முடியும். இதேபோல மத்திய அரசில் துணை அமைச்சர் பதவிகளே அவசியமில்லை. காபினெட் அமைச்சர்கள் – இணை அமைச்சர்கள் மட்டும் போதும். துணை அமைச்சர்கள் என்ற பிரிவு நீக்கப்பட வேண்டும்.

உத்தமர் காந்தி அடிகள் ஒவ்வொரு கிராமமும் ஒரு குடியரசு போலவே செயல்பட வேண்டும் என்று கருதினார்.

நமது அரசியல் அமைப்புச் சட்டத்தில் நமது இந்தியாவை இந்தியக் குடியரசு என்று குறிப்பிட்டுள்ளோம். காந்தி அடிகளின் கண்ணோட்டத்தில் குடியரசு எனக் குறிப்பிட வேண்டுமானால், இந்தியாவில் 6 லட்சம் குடியரசுகள் என்றுதான் குறிப்பிட வேண்டும்.

அதிகாரத்தைப் பரவலாக்கிக் கிராமக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்து வேலை வாய்ப்புகளை உருவாக்கிச் சுய தேவைகளைப் பூர்த்தி செய்வதால், இந்தியாவில் உள்ள 6 லட்சம் கிராமங்களும் உற்பத்தி மையங்களாகவும் சுமார் 100 நகரங்கள் விற்பனை மையங்களாகவும் மாறும். அம்மாற்றம்தான் நமது நாடு முன்னேறுவதற்கான மார்க்கமாகும். ●




அருட்செல்வருடன் அவரது பொள்ளாச்சி இல்லத்தில் பொறியாளர் ஏ.சி. காமராஜ்.

# அருட்செல்வர் எனும் ஜீவநதி

பொறியாளர் ஏ.சி. காமராஜ் அவர்கள் மதுரையில் மத்திய அரசின் நவீன நீர்வழிச்சாலைத் திட்ட நிறுவனத்தின் தலைவராக உள்ளார். அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களோடு சிந்தனை அலைவரிசையில் ஒரே அலைவரிசையைச் சேர்ந்தவர் என்றால் மிகையல்ல.

அருட்செல்வர் நினைத்ததைப் பொறியாளர் காமராஜ் அவர்களும் பொறியாளர் காமராஜ் நினைத்ததை அருட்செல்வரும் நினைத்திருந்தனர்.

நீர் வளம் தமிழகத்திற்கு அநேகமாகப் பற்றாக்குறைதான். அதன் காரணமாகத்தான், தமிழக விவசாயத்திற்கான பாசனநீரைப்பற்றிப் பொறியாளர் அருட்செல்வரும் பொறியாளர் ஏ.சி. காமராஜ் அவர்களும் ஆழமாகச் சிந்தித்துள்ளனர். இந்த இரு புள்ளிகளுக்குமான நேர்கோட்டு இணைப்பானது, தொடர் கட்டுரைகளாக ‘ஓம் சக்தி’யில் வெளிவர உள்ளன. நதிநீர் இணைப்பில் நாட்டமுள்ளவர்களுக்கு இது அமுதமாக அமையும்.

– இ.ஆர்.

“மக்கள் தொண்டே மகேசன்” தொண்டு என்பர். மக்களுக்குச் செய்யும் தொண்டு இறைவனுக்குச் செய்யும் தொண்டாகும். அருட்செல்வர் பொள்ளாச்சி திரு. நா. மகாலிங்கம் அவர்கள் ஆற்றிய தொண்டினை மக்கள் அனைவரும் அறிவர்.



அவர் ஓர் உண்மையான இறை பக்தர். அவரை ஒரு சிறந்த மனிதர் என்பதைவிட, அவர் உயர்ந்த மாமனிதர் எனலாம். “எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே

பொறியாளர்
**ஏ.சி.காமராஜ்**

அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே!” என்ற தாயுமானவரின் கூற்றுப்படி எல்லோரும் இன்பமாக இருக்க வேண்டும் என எண்ணியவர்.

அவரது வாழ்க்கை உயர்ந்தது. ஏனென்றால், “வெள்ளத்து அனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத்து அனையது உயர்வு” என்ற குறள்படி நடந்தவர். அவரது உள்ளமும் வாழ்வும் பல வழிகளில் சிறந்தவை. பலருக்கும் உதாரணமாக இருக்கக் கூடியவை.

அருட்செல்வருக்கும் எனக்கும் சில ஒற்றுமைகள் உண்டு என்றால் அது மிகையாகாது. ஆனால் அவரைப் போல் நான் பெரியவர் என்று சொல்லிக் கொள்ள விரும்பவில்லை. சொல்லவும் முடியாது. ஏனென்றால் அவர் மாமனிதர். இருவருக்குமுள்ள ஒற்றுமை என்னவென்றால், இருவருமே விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர்கள். விவசாயிகளின் கஷ்டம் தெரிந்தவர்கள். இருவருமே இயந்திரப் பொறியாளர்கள்.

பலரும் என்னைக் கட்டடப் பொறியாளர் என்றே நினைப்பர். ஏனென்றால் நான் செய்த பெரும்பாலான வேலைக் கட்டடங்களைச் சார்ந்தவை. அதனடிப்படையில் சமீபத்தில்கூட சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சிவில் பாடத்திட்ட வடிவமைப்புக் குழுவில் என்னையும் உறுப்பினராக நியமித்தார்கள்.

மேலும் இருவருமே நதிகளை இணைக்க வேண்டும்! நாடு வளமாக வேண்டும்! என்ற குறிக்கோளோடு பல ஆண்டுகளாக வலியுறுத்தி அதற்காகச் செயல்பட்டு வந்தவர்கள். எனக்கு முன்பாகவே அவர் சொல்லி வந்திருக்கிறார்.

நதிகள் இணைப்பை எந்த மாநிலமும் ஏற்றுக் கொள்ளவில்லை. நதிநீர் இணைப்பு என்றால், முடியாது என்கின்றனர். ஏனென்றால் இன்று தண்ணீரைக் கொடுத்துவிட்டால், நாளை என்ன செய்வது என்பதுதான் அவர்களின் பயம். ஆகவே கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலைத் திட்டம் (நவீன நீர்வழிச்சாலை) என்ற திட்டத்தைப் பல ஆண்டுக் கால ஆராய்ச்சியின் பலனாகக் கொடுத்தேன்.

அருட்செல்வர் இந்தத் திட்டம் பற்றி அறிந்த பின்னர் அவருடைய ‘கிசான் வேர்ல்ட்’ புத்தகத்தில் சிறப்பாக ஒரு கட்டுரை எழுதினார். இது ஒரு புதுமையான திட்டம். இது நதிநீர் இணைப்பு அல்ல, பிணைப்பு என்பதையும் தெளிவுபடுத்தியிருந்தார். நாடு வளம்பெற வேண்டும் என்ற உயர்ந்த சிந்தனையில் அவர் செயல்பட்டார். நானும் அவர் வழியைப் பின்பற்றினேன். அவரது குறிக்கோள் இத்திட்டத்தை எப்படியாவது செயல்படுத்திட வேண்டும் என்பதாகவே இருந்தது.

வேதாத்திரி மகரிஷி (வாழ்க வளமுடன்) அவர்கள் இத்திட்டம் பற்றி முழுமையாக அறிந்து ஆதரித்து வந்தார். அவரது ஆஸ்ரம மாணவர்களுக்கு இத்திட்டம் பற்றி விளக்கப் பலமுறை என்னை அழைத்துள்ளார். நானும் சென்று திட்டத்தை விளக்கியுள்ளேன். மகரிஷி அவர்கள் என்னை அங்குத் தங்கி இருந்து விட்டுதான் செல்ல வேண்டும் என வற்புறுத்துவார். அங்கு நான் செல்லும் நேரமெல்லாம் எனக்கு அருட்செல்வரின் ஞாபகம் வரும்.

ஏனென்றால் அந்த இடத்தைக் கொடுத்தவர் அருட்செல்வர். அவரது கல்விப்பணி மிகவும் போற்றுதலுக்குரியது. ஏராளமான பள்ளிகள், கல்லூரிகளை நிறுவியுள்ளார். ஏனென்றால், மக்களுக்கு அறிவை (கல்வியை) வழங்கினால் போதும் அவர்களின் வாழ்க்கை உயரும் எனத் தீவிரமாக நம்பினார்.

முதன்முதலில் அருட்செல்வரை சென்னையில் அவரது இல்லத்தில் சந்தித்தேன். அப்போது சில புத்தகங்களை எனக்குப் பரிசாகக் கொடுத்தார். பொதுவாகவே புத்தகம் என்றால் விரும்பிப்



அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களுடன் பொறியாளர் ஏ.சி. காமராஜ்

படிக்கும் பழக்கமுடையவன் நான் என்பதால் மகிழ்ச்சி யோடு பெற்றுக் கொண் டேன்.



அருட்செல்வரின் புதல்வர் டாக்டர் எம். மாணிக்கம் அவர்களுடன் பொறியாளர் ஏ.சி. காமராஜ் மற்றும் திரு. போகர் பழனிச்சாமி.

அருட்செல்வர் எனக்குக் கொடுத்த புத்தகங்களில் மகாபாரதம் பற்றி அவர் எழுதிய புத்தகமும் ஒன்று. அதில் ஒரு சம்பவம் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்தத் தேதியில் இந்தக் கிழமையில் நடந்தது என்பதை எழுதியுள்ளார். அப்படியானால், அவர் எந்த அளவிற்கு ஆய்வு செய்திருப்பார் என்பதைக் கவனிக்க வேண்டும். இதெல்லாம் கூட ஆய்வு செய்து எடுக்க முடியுமா என எனக்கு ஒரே ஆச்சரியம்!

அடுத்து, சத்தியமூர்த்தி நூற்றாண்டு விழா நடந்தது. அந்த விழாவை மதுரையில் எனது தலைமையில் நடத்த வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. விழாவை நடத்துவது சம்பந்தமாக சத்தியமூர்த்தியின் மகள் லட்சுமி அம்மாவிடம் பேசிக்கொண்டிருக்கும்போது நூற்றாண்டு விழாவிற்கு யாரைச் சிறப்புரை வழங்க அழைப்பது என ஆலோசித்தபோது, அருட்செல்வர் பெயர் முன்மொழியப்பட்டது. அப்போது அங்கிருந்த நான் சத்தியமூர்த்தியுடன் நெருங்கிப் பழகியவர் அருட்செல்வர் என்பதால் அவரை அழைப்பதே சிறப்பு என்றேன்.

அதன்படி அழைப்பினை ஏற்று விழாவிற்கு வந்து தலைமை தாங்கி விழாவினைச் சிறப்புறச் செய்தார். அப்போதெல்லாம் அவர் நதிகள் இணைப்புப் பற்றித்தான் பேசுவார்.

பின்னர், சில காலம் கழித்து நீர்வழிச்சாலைத் திட்டம் பற்றி அறிந்து என்னைச் சந்திக்க வேண்டும் என்றார். அவர் சொல்லி ஒரு வருடமாகியும் என்னால் அவரைச் சந்திக்க இயலவில்லை. ஏனென்றால் திட்டம் சம்பந்தமாக மந்திரிகளையும், அரசு அதிகாரிகளையும், சந்திக்க டெல்லிக்கு அடிக்கடி சென்று விடுவேன்.

மதுரையில் ஒருமுறை அவரைச் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தபோது, ‘கிஷான் வேர்ல்ட்’ புத்தகத்தில் தாங்கள் நீர்வழிச்சாலைத் கருத்துருவை நன்கு புரிந்து கொண்டு கட்டுரை எழுதியுள்ளீர்கள் என நான் பாராட்டினேன். அதற்கு அவர் திட்டத்தையும் என்னையும் வெகுவாகப் புகழ்ந்தார்கள்.

ஒருமுறை அருட்செல்வரைச் சந்திக்கப் பொள்ளாச்சியில் உள்ள அவரது இல்லத்திற்குச் சென்றிருந்தேன். அப்போது நீர்வழிச்சாலைத் திட்டம் பற்றி வெகுநேரம் பேசினார்கள். அவரைச் சிரமப்படுத்துகிறோமோ என்று எனக்கே மிகவும் சங்கடமாயிருந்தது. ஆனால், அவர் எதற்கும் கவலைப்படாமல் பேசினார்.

மதியம் 1 மணியானது. சென்று வருகிறேன் என விடைபெற்றேன். ஆனால் அவர், சாப்பாட்டு நேரம் ஆகிவிட்டது; இருந்து சாப்பிட்டுவிட்டுத் தான் செல்லவேண்டுமென வற்புறுத்தி என்னையும் அவருடன் அமர்ந்து உணவருந்தச் செய்தார். அவரின் அன்பும் உபசரிப்பும் என்னை மிகவும் நெகிழச் செய்தன.

அவரைக் கோயம்புத்தூரில் சந்தித்தபோது, அவரது உடல்நிலை மோசமாக இருந்தது. யாரையும் அவர் சந்திக்கவில்லை. ஆனால், நான் வந்தது தெரிந்ததும் எனக்கு நேரம் ஒதுக்கி, என்னை வரவேற்று என்னுடன் வெகுநேரம் பேசினார். உடன் லண்டனிலிருந்து வந்திருந்த பொறியாளர் ஜெயச்சந்திரன் அவர்களும், தாராபுரம்

திரு. செல்லமுத்து அவர்களும் இருந்தனர். பலரும் திட்டத்தைப் புரிந்துகொள்ளச் சிரமப்படுவதால், ஓர் ஆராய்ச்சி மையம் அமைக்கத் திட்டமிட்டுள்ளோம் என அவரிடம் கூறினோம். நான் திட்ட மதிப்பீடு கூட அவரிடம் சொல்லவில்லை.

உடனே அவர், உங்களுக்குக் குறைந்தது ரூ.50 கோடி வேண்டும் எனச் சரியாகக் கணித்தார். மேலும், பெரும்பாலான பொறியியல் கல்லூரிகள் வசதியாகவே உள்ளன. ஒரு பொறியியல் கல்லூரி ரூ.1 கோடி வீதம் கொடுத்தாலே போதும். பல்கலைக்கழகம் என்றால் ரூ.3 கோடி கொடுக்கலாம். எனவே, நாம் அவர்களைக் கேட்கலாம் என்றார். மேலும் உங்களுக்கு ஆராய்ச்சி மையம் மிக மிக அவசியம் என்றதோடு இது பொறியியல் கல்லூரிகளுக்கும் தேவை என்றார்.

அருட்செல்வர் அவர்கள் ஒருமுறை என்னிடம், நீங்கள் திட்டத்திற்காகப் பல இடங்களில் அலுவலகம், வேலையாட்கள் எனச் செலவு செய்கிறீர்கள்; எப்படி செய்கிறீர்கள் என்றார். சிரமத்துடன்தான் செயல்பட்டு வருகிறேன் என்று கூறினேன். உடனே உங்களுக்கு 2 வருடங்களுக்காவது செலவுகளைச் சந்திக்கப் பணம் தேவைப்படும். ஏதாவது செய்யலாம் என்றவர் ரூ.10 லட்சம் காசோலையாக எனது நிறுவனத்தின் பெயருக்கு அனுப்பி வைத்தார்.

அதோடு பல முன்னணித் தலைவர்களுக்கும், நண்பர்களுக்கும் நன்கொடை அளித்து உதவும்படி வேண்டி அவரே தனியாகக் கடிதம் எழுதினார் என்றால் பலருக்கு இதை நம்ப முடியாது. இதிலிருந்து அவர் எந்த அளவிற்கு இந்தத் திட்டம் வரவேண்டும் என எண்ணியிருப்பார் என்பதை நாம் அறிந்து கொள்ளலாம்.

அவரது மறைவுக்குப் பின்னர் அவரது புதல்வர் திரு.மாணிக்கம் அவர்களைச் சந்தித்தோம். அப்போது எனக்கு என்ன ஆச்சரியம் என்றால், அருட்செல்வர் போலவே அவரது புதல்வரும் அன்போடு என்னை வரவேற்று உபசரித்தார். அது மட்டுமல்ல என்னைப் பற்றியும், நதிகள் இணைப்புப் பற்றியும் நன்கு தெரிந்து வைத்திருந்தார்.

நதிகள் இணைப்பிலும், விவசாயத்திலும் மிகுந்த ஆர்வம் உள்ள திரு.மாணிக்கம் ஐயா அவர்கள் உடனே மடிக்கணினியைத் திறந்து ஒவ்வொரு நாட்டிலும் விவசாயம் எவ்வாறு செய்யப் படுகிறது, நம் நாட்டில் என்னென்ன தொழில் நுட்பங்களைப் பயன்படுத்தலாம் என்று என்னுடன் ஆர்வமாகக் கலந்துரையாடினார்.

அருட்செல்வர் தொழில்துறையில் செய்த சாதனைகளை யாராலும் செய்ய இயலாது. அவர்க்கு நிகர் அவரே. அவர் தொழிலை லாப நோக்கத்தில் மட்டும் செய்ததில்லை. நல்ல நோக்கத்துடன் செய்து வந்தார்.

உதாரணத்திற்கு, அவரது சக்தி சுகர்ஸ் சர்க்கரை ஆலையில் கிடைக்கும் கழிவுப்பொருட்களைக் கொண்டு மதுபானம் தயாரித்து விற்க முடியும். ஆனால் ஆலையை மூடினாலும் மூடுவேன். மதுபானம் தயாரிக்கக் கழிவுப் பொருட்களைத் தரமுடியாது என்றவர் அருட்செல்வர்.

தனது தொழில் மூலம் மக்கள் மேன்மையடைய வேண்டும் என்பதே அவரது உயர்ந்த நோக்கம். நமது நவீன நீர்வழிச்சாலைத் திட்டமும் மக்களை மேன்மையடையச் செய்யும் திட்டம் என்பதாலேயே அவர் தீவிரமாக ஆதரித்தார். மேலும் இருவரும் காந்தி அறவழியைப் பின்பற்றுபவர்கள். அதனால்தான் இரண்டாவது சுதந்திரம் என நாங்கள் இத்திட்டத்திற்குப் பெயரிட்டோம்.

அருட்செல்வர் என்ன நோக்கத்திற்காக வாழ்ந்தாரோ, அந்த நோக்கத்தை நிறைவேற்ற நாம் பாடுபடவேண்டும். அவர் என்னிடம் கடைசியாகக் கூறியது : திட்டத்தை நிறைவேற்ற அரசாங்கத்திடம் பணம் கேட்காதீர்கள். அனுமதி மட்டும் பெறுங்கள். ரூ.10 பங்காக மக்களிடம் வாங்குவோம். விவசாயிகளும் விரும்பிக் கொடுப்பார்கள். நாமே திட்டத்தை நிறைவேற்றுவோம் என்றார்.

மேலும் அவர் நீர்வழிச்சாலையில் வருடந்தோறும் நீர்வழிப்போக்குவரத்து, மின்சாரம் என ஏராளமான பலன்கள் கிடைப்பதால் வருமானம் ஏராளம் கிடைக்கும். இது சாத்தியம்! எனவே, மக்களிடம் செல்வோம் திட்டத்தை நிறைவேற்றுவோம் என்றார்.

அப்படிப்பட்ட உயர்ந்த மாமனிதராக வாழ்ந்த அருட்செல்வரின் கனவை நனவாக்க நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் விரைவில் செயல்பாட்டிற்கு வந்திட நாம் அனைவரும் ஒருங்கிணைந்து செயல்படுவோம்.

**(தொடரும்)**



றியது அன்னாத்தாளுக்கு.

தன்னுடைய தாய்க்குச் செய்ய முடியாமல் போன உதவியை இந்தத் தாயிக்குச் செய்ய முயற்சிப்பதாக நினைத்துக் கொண்டார் கலெக்டரம்மா. அருணாதேவியின் இளமைக்கால வறுமையும், அதனால் அனுபவித்த துன்பங்களும் கண்முன்னே காட்சிகளாக விரிவதை யாரறிவார்? யாரிடம் போய்ச் சொல்வது? “இவர்களைப் போன்றவர்களுக்கு உதவிசெய்வதன் மூலம்தான் அந்த வலிகள் குறையும்” – அருணாதேவியின் மனதில் சிந்தனை மேகங்கள் குவிந்தன. ●

# தீமையைச் சுடுவோம்!

எட்டய புரத்து இரும்பு மனிதன்
பட்டயம் எழுதிய பாவலன் – தமிழை
எட்டுத் திசையிலும் எடுத்துச் சென்றவன்

பாட்டினில் வளர்ந்த சுதந்திர நெருப்பைப்
பற்ற வைத்தவன் பாரத மெங்கும்!
எத்தனை கனவுகள் எத்தனை நினைவுகள்
அத்தனையும் பெற ஆசைப்பட்டவன்!

அடிமைத் தளையில் கட்டுண்டு கிடந்த
அறியாமை இருள் கிழித்து வெளிவர
ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம் என
ஆடிப்பாடி அகமிக மகிழ்ந்தவன்!

பாரதி என்றொரு பாவல னால்தான்
பைந்தமிழ் வெல்லப் பாகாய் இனித்தது
நாளிதழ் மூலம் நற்றமிழ் வளர்த்தவன்
நாளைய விடியலை இன்றே கணித்தவன்

போகப் பொருளாய் பெண்மையை வதைத்த
போக்கிரித் தனங்கள் பொடிப் பொடியாக
வேகக் கவிதை ஆயுதத் தாலே
வீழ்த்தி வென்றவன்! பெண்மையைப் போற்றி
வெற்றி கண்டவன்! வீழ்ந்து கிடந்த
பாவையர் உரிமையை மீட்டுத் தந்தவன்!

ஆயிரம் உண்டு ஜாதி இங்கெனினும்
அன்னியர் வந்து புகல் என்ன நீதி!

இந்தியத் தாய் பெற்ற மக்களெல் லோரும்
சிந்திய ரத்தம் ஒன்றுதான் அதனால்
ஜாதிகள் இல்லை சரிநிகர் சமானம்
ஆதிப் பரம்பொருள் ஆக்கிய தெல்லாம்
அனைவர்க்கும் பொது உடைமை என்றார்த்தவன்

வாராத மாமணி போல்வந்த பாரதி
வாழ்ந்த மண்ணில் நாம் வாழ்வதே பெருமை!
தேர்ந்து படிப்போம்! தினமவன் எழுத்தை
தீமையைச் சுடுவோம்! தலைமுறை பயன் பெறும்!!



கவிஞர் வெற்றியூர்
சுப. திருஞானம்






# ஓரிசா – புவனேஸ்வர் தமிழ்ச்சங்க விழா!

நினைவுப் பரிசு வழங்கும் சங்கச் செயலர் திரு. துரைசாமி, நீதியரசர் மகாதேவன், தொழில் அதிபர் டாக்டர் ம. மாணிக்கம், விஜயா பதிப்பக உரிமையாளர் மு. வேலாயுதம் ஆகியோர்.

தமிழர்கள் இன்று உலகெங்கும் சென்று பணிகள் செய்தோ, தொழில்கள் செய்தோ வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் எங்கு சென்றாலும் நமது மொழியை, பண்பாட்டை மறவாது போற்றிக் காக்கின்றனர். இந்தியாவில் அனைத்து மாநிலங்களிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் தமிழ்ச் சங்கங்கள் அமைத்து, தமிழ்ப்பண்பாட்டு நிகழ்ச்சிகளையும், இலக்கிய விழாக்களையும் நடத்தி வருகின்றனர்.

ஓரிசா மாநிலத்தின் தலைநகரான புவனேஸ்வரத்திலும் 'புவனேஸ்வர் தமிழ்ச் சங்கம்' இயங்கி வருகிறது. அதன் தலைவராக திரு. செ. துரைசாமி செயல்பட்டு வருகிறார்.

திரு. செ. துரைசாமி அவர்கள் கொங்கு நாட்டில் திருப்பூரிலிருந்து ஓரிசா மாநிலம் புவனேஸ்வரில் ஆழ்துளைக் கிணறு அமைக்கும் நிறுவனத்தை நடத்தி வருகிறார். தமிழுக்கும் ஓர் ஆழ்துளைக் கிணறு அமைத்து ஓரிசா மாநிலத்தில் அதை ஓங்கி வளர்க்க வேண்டும் என்பது தான் அவருடைய ஆசை. ஆனால், தமிழ்நாட்டில் தமிழுக்கு ஆழ்குழி தோண்டுபவர்களும் உண்டு. துரைசாமி அவர்களோ, தமிழுக்காக ஓரிசா மாநிலத்திற்குச் சென்று அம்மாநிலத் தலைநகரம் புவனேஸ்வரத்தில் தமிழ்ச்சங்கத்தை உருவாக்கி, பக்கத்திலுள்ள கொல்கத்தா, டெல்லி, ஆந்திரா முதலிய இடங்களிலுள்ள தமிழ்ச் சங்கங்களை இணைத்து விழா எடுத்த தமிழாகரர்.

அவருடைய தமிழ்ப்பணி தலைமீது வைத்துப் போற்றப்பட வேண்டிய ஒன்றாகும். அவருடைய மேலதிக ஆசை, தமிழ்நாட்டில் கோவையிலேயே இதுபோன்ற கொண்டாட்டத்தை ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதாகும்.

சென்ற *5.11.2017* அன்று இச்சங்கத்தின் வெள்ளிவிழாக் கொண்டாடப்பட்டது. விழாவில் தலைவர் செ. துரைசாமி வரவேற்புரையாற்றினார். பொதுச்செயலர் தி.ப. தமிழ்முல் அன்சாரி உரையாற்றினார். நீதியரசர்

ஆர். மகாதேவன் அவர்கள் சிறப்புரை யாற்றினார்.

தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் கோ. விஜயராகவன், சக்தி குழுமங்களின் செயல் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம், திரிவேணி எர்த் மூவர்ஸ் நிர்வாக இயக்குநர் திரு. பா. பிரபா கரன் ஆகியோர் கருத்துரை வழங் கினர். புரவலர் ஸ்ரீ. சுந்தரராஜன், ஐ.ஏ.எஸ். தலைமை உரையாற்றினார். விஜயா பதிப்பகம் மு. வேலாயுதம், சி. இராஜேந்திரன், இரா. சந்தான கோபாலன், ஹெலினா கிறிஸ்டோபர், த. ஞானசேகரன், மு. நாகேசுவரன், மு. மீனாட்சிசுந்தரம், இரா. முகுந்தன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

நீதியரசர் ஆர். மகாதேவன், 'அடுத்த தலைமுறைக்குத் தமிழைப் பிழையின்றிக் கொண்டு சேர்ப்பது தான் நம் முன் இருக்கும் மிகப்பெரிய சவால். தமிழ் இலக்கியங்களைத் தற் காலத்திற்கு ஏற்பப் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாக்கித் தர வேண்டும்' என்றார்.

தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் கோ. விஜயராகவன், தமிழ் மொழி வளர்ச்சிக்குத் தமிழக அரசு மேற் கொண்டு வரும் நடவடிக்கைகளை விவரித்தார்.

சக்தி குழுமங்களின் செயல் தலை வர் டாக்டர். ம. மாணிக்கம் அவர்கள் பேசுகையில், 'தாழ்வு மனப்பான்மை மையைத் தமிழன் கைவிட வேண்டும். தமிழன் தலை நிமிர்ந்தால்தான் தமிழும் நிமிர்ந்து செழித்து வளரும். மருத்துவம், சுகாதாரம், தொழில் வளர்ச்சி, தனிநபர் வருமானம், சிறு, குறு, நடுத்தர, பெரிய ஆலைகளின் எண்ணிக்கை முதலிய அம்சங்களில் அனைத்திந்திய அளவில் தமிழ்நாடே முதலிடம் வகிக்கிறது. தமிழர்களாகிய நாம் இது குறித்துப் பெருமைப்பட வேண்டும்' என்றார்.

பின்னர் கலை நிகழ்ச்சிகள் நடை பெற்றன. விழாவில் நாடெங்கிலு முள்ள பல்வேறு தமிழ்ச்சங்கங்கள் கௌரவிக்கப்பட்டன.

– ந.நி.



விழாவில் கலந்துகொண்ட புவனேஸ்வரம்வாழ் தமிழர்கள்

# ‘செம்மொழித் தமிழ் அகப்பொருள் களஞ்சியம்’

# வெளியீட்டு விழா!

முதுபெரும் தமிழறிஞர் சிலம்பொலி செல்லப்பனார் அவர்கள் 20 ஆண்டுகள் உழைத்துத் தமிழுக்கு மாபெரும் கொடையாகத் தன்னுடைய வாழ்நாள் சாதனையாகப் படைத்துள்ள “செம்மொழித் தமிழ் அகப்பொருள் களஞ்சியம்” என்னும் 14 தொகுதிகளைக் கொண்ட நூல் வெளியீட்டு விழா, சென்ற 2.11.2017 அன்று சென்னை லீ ராயல் மெரிடியன் ஹோட்டல் அரங்கில் சிறப்பாக நடைபெற்றது.

பழனியப்பா பிரதர்ஸ் வெளியீடான இந்நூல் வெளியீட்டு விழாவிற்கு, கொங்குமாமணி டாக்டர் பழனி ஜி. பெரியசாமி அவர்கள் தலைமை வகித்து, சிலம்பொலியாரின் ஒப்பற்ற சாதனைகளை அழகுற எடுத்துரைத்தார்.

மேனாள் அமைச்சர் பேராசிரியர் க. அன்பழகனார் நூலை வெளியிட்டுப் பேசுகையில், “சிலம்பொலி செல்லப்பன் உள்ளும் புறமும் தமிழை நிரப்பி 2 ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய தமிழைத் தற்காலத்திற்கும் ஏற்ற வகையில் மிக அருமையாகத் தொகுத்துத் தந்திருக்கிறார்” என்றார்.

முதற் பிரதியைப் பெற்றுக் கொண்ட புதுச்சேரி சட்டப்பேரவைத்




சிலம்பொலி செல்லப்பனாரின் 90 அகவை விழாவில் “செம்மொழித் தமிழ் அகப்பொருள் களஞ்சியம்” நூல் வெளியிடப்பட்ட காட்சி. மேடையில் கவிஞர் சிற்பி, கவிப்பேரரசு வைரமுத்து, பேரா. க. அன்பழகனார், சிலம்பொலியார், தொழிலதிபர் பழனி ஜி. பெரியசாமி, இயக்குநர் எஸ்பி. முத்துராமன், திரு. வே. கொ. சிவக்கொழுந்து மற்றும் அன்பர்கள்.

துணைத் தலைவர் திரு. சிவக் கொழுந்து பேசுகையில், "பலருக்கு 60 வயதில் தடுமாற்றம் வரும். சிலம் பொலியாருக்கு, 90 வயதிலும் தடுமாற் றம் வராமல் தமிழ் காத்திருக்கிறது" என்று குறிப்பிட்டார்.

கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம் மிக அருமையான வாழ்த்துக்கவிதை வழங்கினார். கவிஞர் பொன். செல்வ கணபதி கவிதை நடையிலும், சிந்திக்க வைக்கும் உரைநடையிலும் வரவேற் புரையாற்றினார்.

சிறப்புரையாற்றிய கவிப்பேரரசு வைரமுத்து அவர்கள் பேசுகையில், "90 வயது கொண்ட சிலம்பொலியா ரின் ஆய்வு நூலை 94 வயது கொண்ட பேராசிரியர் அன்பழகனார் வெளியிடுவது தமிழுக்குக் கண் கொள்ளாக் காட்சி. சிலம்பொலியார் இந்த ஆய்வு நூலை உருவாக்க 20 ஆண்டுகள் செலவழித்திருக்கிறார்.

மனிதன் எதுவரைக்கும் இளமை யாக இருக்கிறான் என்றால், அவன் சிந்திக்கும் வரை இளமையாக இருக் கிறான். சிலம்பொலியார் சிந்தித்துக் கொண்டே இருக்கிறார். அதனால் இன்றும் இளமையாக இருக்கிறார்.

20 ஆண்டுகள் உழைப்பு, 14 தொகுதிகள், ஆயிரக்கணக்கான பக் கங்கள். இந்த நூல் ஒரே நாளில் உரு வானதில்லை.

தொகுத்தல், கற்றல், ஆய்தல், தெளிதல், தெளிவித்தல் என ஐந்து அடுக்குகளில் இந்த நூல் இயங்கி வருகிறது. இந்த ஐந்து அடுக்குகளைக் கடப்பதற்கு அவர் விழித்திருந்த இரவு கள் எத்தனை? பணியாற்றிய பகல்கள் எத்தனை? அவர் மூளைக்குள் வெட் டிய மின்னல்கள் எத்தனை? இதயத் தில் இடித்த இடி எவ்வளவு? இவற்றை யெல்லம் புரிந்து கொண்டால்தான் இந்த நூலின் அருமை தெரியும்.

20 ஆண்டுக்காலம் இவர் சங்க இலக்கியத்தைப் படித்துக்கொண்டே இருந்தார் என்பது இவர் எழுதியுள்ள தெளிவுரையைப் பார்க்கின்றபோது தெரிகின்றது. இந்த உழைப்பையும், அதனால் உருவாக்கப்பட்டுள்ள இந்த அகப்பொருள் களஞ்சியத்தைப் பற்றி யும் நூற்றாண்டுகளுக்குப் பின்னும் தமிழ்ச் சமுதாயம் சொல்லிக் கொண்டே இருக்கும். தமிழ் இலக்கிய வரலாற்றில், தமிழ் அகப்பொருள் களஞ்சியம் எழுதியதற்காக ஒரு கொங்கு மண்டலத் தமிழனின் பெரும் புகழும் நாட்டில் நின்று நிலவும் என்று நான் கொண்டாடி மகிழ்கிறேன்.

சிலம்பொலியார் மறைமலையடி களாரின் ஆய்வு நெறியை அடி யொற்றி, எழுத்தெண்ணிச் சங்க இலக் கியத்தைத் தேர்ந்து தெளிந்து தெளி வுரை எழுதியிருக்கிறார்.

சங்க இலக்கியத்தைக் கற்பது மிக வும் அரிது. இப்படிப்பட்ட எளிய உரை இலக்கியத்திற்கு அவசியம் தேவைப்படுகிறது. பழைய இலக்கியங் களைப் பழஞ்சொற்களோடு வாசிக்க இதுபோன்ற எளிய உரை தேவைப் படுகிறது. இது ஒரு பெரிய சாதனை.

ஒரு பல்கலைக்கழகம் ஆற்ற வேண்டிய பணியைத் தனி மனித ராகச் சாதித்திருக்கிறார். அவருடைய தமிழைப் பார்த்து வியக்கிறேன். இந் நூலில் வடசொல் ஒரு சதவிகிதத் திற்கும் குறைவாகவே உள்ளது. ஒரு கணித ஆசிரியர், தமிழாசிரியராய்ச் செய்த மிகப்பெரிய சாதனை இது. இந்நூல் தமிழுக்குக் கவசமாக, அறிவுப் பாத்திரமாகச் சிறந்து விளங்கும்" என்று பாராட்டினார்.

திரைப்பட இயக்குநர் திரு. எஸ்பி. முத்துராமன் விழாவிற்கு முன்னிலை வகித்துச் சிறப்பித்தார். பழனியப்பா பிரதர்ஸ் உரிமையாளர் திரு. ப. செல் லப்பன் நன்றியுரை நல்கினார். விழா நிகழ்ச்சிகளை இலக்கியவீதி திருமதி வாசுகி பத்ரிநாராயணன், திரு. தமிழன் ராகுல்காந்தி ஆகியோர் தொகுத்து வழங்கினர்.

**– ந. நி.**